# ஆர்யதர்மம்

புத்தகம் 17, ஸஞ்சிகை 24

ஆங்கிரஸ, ஆனி 31

*[July 14, 1932]*

Record no. 287

*Āryatarmam*

*Puttakam 17, sañcikai 24*

*Āṅkirasa, Āṉi 31*

*[July 14, 1932]*

Record no. 287

14-7-29.



ஸ்ரீ திரிபுரசுந்தரீ ஸமேத ஸ்ரீசந்திரமௌளீசுவராய நம:

# ஆ ர் ய த ர் ம ம்.

स्वधर्मपीडा मविचिन्त्य योऽधं मत्पापशुद्ध्यर्थमिह प्रवृत्तः ।
नचेत्क्षमामप्यहमत्र कुर्यां मत्तः कृतघ्नो वद कीदृशोऽन्यः ॥

'தனக்கு தர்மஹாநி உண்டாவதைக் கூட கெவனிக்காமல் என்னுடைய பாபசுத்திக்காகவே எவன் பிரவிர்த்தி செய்கிறானோ அவன் விஷயத்தில் பொறுமையைக் கூட நான் காட்டவில்லையானால் என்னைவிட செய்த நன்றி மறந்தவன் எவனாகிலும் உண்டோ! சொல்லும்,

தன்னிஷ்டபடி வார்த்தை சொல்லாதவனையும், நடவடிக்கை நடத்தாதவனையும் நிந்தனை செய்வது ஸாமான்ய ஜனங்களின் இயற்கை. அந்த நிந்தையால் நிந்திப்பவனுக்கு லாபம் ஒன்றும் கிடைப்பதில்லை. நிந்திக்கப்பட்டவனுக்கு நஷ்டமொன்றும் வந்துவிடுவதில்லை. இந்த உண்மை தெரிந்திருந்தாலும் ஜனங்கள் நிந்திக்காமலிருப்பதில்லை. நிந்திக்கப்பட்டவனாலும் ஸாமான்ய மனுஷ்யனாகில் ஆத்திரப்படாமலும் பதில் நிந்தை செய்யாமலுமிருப்பதில்லை. இப்படி பரஸ்பரம் நிந்தை செய்து தூற்றிக் கொள்ளும் பொழுது ஸ்னேஹமும் ஒற்றுமையும் எங்கே வரப்போகிறது. அவை இல்லாவிடில் பொதுக்காரியம் நடைபெறாததோடு நிற்காமல் தடைபட்டும் போகிறது. அன்றியும் எவன் ஒருவனை நிந்திக்கிறானோ அவனுக்கு தர்மஹானி உண்டாகிறதாம். எவன் நிந்திக்கப்படுகிறானோ அவனுடைய பாபங்கள் விலகிவிடுகின்றனவாம். இவ்வுண்மையை அறிந்த ஸாதுக்கள் எவனாகிலும் தம்மை நிந்தித்துவிட்டாலும் ஆத்திரப்படமாட்டார்கள். மனதிலும் எவ்வித விகாரத்தையும் அடையமாட்டார்கள். ஏனெனில்— "தன்னுடைய தர்மம் குறைந்துபோவதையும் லக்ஷியம் செய்யாமல் என் பாபம் தொலையட்டுமென்றே நம்மை நிந்திக்கப் பிரவர்த்தித்து உபகாரம் செய்த இவன் விஷயத்தில் வேறு விதமான பிரத்யுபகாரம் செய்து செய்த நன்றியை பாராட்டாமற் போனாலும் பொறுமையைக் கூட அடையாமற் போவேனாகில் செய்த நன்றி மறந்தவன் நம்மைவிட வேறு எவனிருக்கிறான்" என்று அவர்கள் நினைப்பதாலாமென்க. இப்படி ஸாது ஜனங்கள் பொறுமை அடைந்து பேசாமலிருந்து விட்டால் நிந்தனை செய்ய பிரவிருத்தி செய்தவன் தானாகவே ஓய்ந்து போய் தன்னிடமே குற்றமிருப்பதாக என்னை நிந்தனை செய்ததற்காக மன்னிப்புக் கேட்டுக் கொள்வானேயன்றி விரோதப்படமாட்டான். அப்பொழுது ஒருவர்க்கொருவர் மனஸ்தாபப்பட இடமில்லாமையால் ஸ்னேகத்தையே பாராட்டுவார்கள். ஒற்றுமையை அடைவார்கள். இத்தகைய உத்தமகுணமாகிய பொறுமையை அடைந்து பெரியோர்கள் பெருமை அடைந்தது போல் எல்லோரும் பெருமை அடைந்து க்ஷேமத்தை அடைவார்களாக.

சுபம். ப-ஸ்ரீ

௵ அ௯



# ஆர்யதர்மம்.

ஆங்கிரஸ-ஷு ஆனி-மீ ௩௧ உ

## உபாகர்ம நிர்ணயம்.

நிகழும் ஆங்கிரஸஷுத்தில் வரும் உபாகர்ம காலத்தைப்பற்றி திருச்சி அத்வைத ஸபையில் ஒருவிதமாக நிச்சயிக்கப்பட்டிருந்தா லும் பஞ்சாங்க பேதத்தினால் மீண்டும் ஸம்சயிக்கும்படி ஆயிற்று. ஆதலால் கும்பகோணவாசிகளான மஹாஜனங்களும் மற்ற கொ ராந்தரங்களிலிருந்து வந்த மகாஜனங்களும் கும்பகோணத்தில் நடந்த அத்வைத ஸபையில் ஷை ஸபாபண்டிதர்களிடம் தெரி வித்துக் கொண்டார்கள். அதில் கும்பகோணவாசிகளின் விக் ஞாபனமாவது —

கும்பகோணம் அத்வைத ஸபா மெம்பர் வித்வான்கள் அவர் கள் சமூகத்திற்கு அடியில் கையொப்பமிட்டஷை கும்பகோணம் மஹாஜனங்கள் செய்துகொண்ட விக்ஞாபனம். இந்த ஸம்வத்ஸ ரம் யஜுருபாகர்மாவானது பஞ்சாங்கங்களில் அனேக பிரகார மாக இருக்கிறதனால் 3-காலம் இருப்பதிலும் எந்த காலத்தில் செ ய்தால் ஸாதுவாக இருக்குமென்கிற விஷயத்தை ஷை ஸபையில் தீர்மானித்து நோட்டீஸ் போட்டு எல்லாருக்கும் தெரியும்படியாய் பிரார்த்திக்கிறோம்.

(ஒப்பம்)

பக்தபுரி அக்ரஹாரம் ராமசந்திரதீக்ஷிதர்.
மேலக்காவேரி அனந்தராமகனபாடிகள்
தி குப்புஸாமிகனபாடிகள்
ராமசுவாமி சாஸ்திரிகள்
நாகேசுவரசாஸ்திரிகள்
வேங்கட்டராமய்யர்
சி, நாராயணசாஸ்திரிகள்
ராமசுவாமிசாஸ்திரிகள்





தேஜினீவநேசுவரசாஸ்திரிகள்
டி. வி. சீனிவாஸசாஸ்திரிகள்

மற்ற கிராமாந்தர வாஸிகளின் விக்ஞாபனமும் இந்த அபிப்ராயத் தையே ஒத்திருந்தது. பலவிடங்களிலிருந்து லெட்டர்களும் வந் திருந்தன. திருக்கணித பஞ்சாங்கத்தில் ருக்வேதி சிராவணம் போட்டிருப்பதில் சாகாதீசனை குருவுக்கு பால்யதோஷம் இருப் பதாகவும் யாஜுஷோபாகர்மத்தில் ஆவணிமீ 1௨ அந்த பஞ்சா ங்கரீதியாய் ஸங்கிரமணமில்லாவிட்டாலும் முதல் நாள்58-30-க்கு ஸங்கிரமணமாதல்பற்றி ஆவணிமீ 1௨யே புண்யகாலமாகையால்.

**यदहः पुण्यकालस्स्यात्तदहर्दोष इष्यते ॥**

என்றையதினம் புண்யகாலமோ அன்றையதினம் தான் தோஷம் என்ற வசனப்படி சிராவணிக்கு தோஷமிருப்பதாகவும் பிரும் மஸ்ரீ போலகம் சுந்தரசாஸ்திரிகளவர்களாலும் பிரும்மஸ்ரீ மரூர் வைத்தினாதசாஸ் திரிகளவர்களாலும் கூறப்பட்டது. வாக்ய சாங்கப்படி அவைகள் போட்டிருப்பது சரிதானென்று பல கோல் சேழ்க்கப்பட்டது. இவைகளையெல்லாம் தீர்மானிப்பத் காக ஸபாபண்டிதர்களால் உபாகர்ம நிர்ணயசங்கம் என்று பேர் அடங்கிய சங்கத்தை ஏற்பாடு செய்து சாஸ்திர விசார தின் பேரில் நிர்ணயிக்கும்படிக்கும் அதையே சபையின் தீர்மான மாக அங்கீகரிக்கும்படிக்கும் கூறப்பட்டது.

பிரும்மஸ்ரீ திருவாதி விசுவநாதசாஸ்திரிகள்,
,, பக்ஷிதீர்த்தம் ராமச்சந்த்ரதீக்ஷிதர் அவர்கள்
,, தேதியூர் சுப்ரம்மண்யதீக்ஷிதர் அவர்கள்,
,, போலகம்சுந்தரசாஸ்திரிகளவர்கள்
,, மரூர் வைத்யநாதசாஸ்திரிகளவர்கள்
,, சேங்காலிபுரம் வைத்தினாதசாஸ்திரிகள் அவர்கள்
,, வரகூர் வி. எஸ். வெங்கட்டராமசாஸ்திரிகளவர்கள்

ஆகிய இவ்வேழுபேர்களும் தர்மசாஸ்திர க்ரந்தங்களை வைத்துக் கொண்டு விசாரம்செய்தார்கள். சங்கைகள் யாவும அநுவதிக்கப் பட்டன. அவைகளுக்கு சமாதானமும் கூறப்பட்டது. அவையா வன. திருக்கணித பஞ்சாங்கத்தில் சிராவணிக்குத் தோஷம் இரு க்கிறதே என்பது முதல் சங்கை. அதற்கு சமாதானம் என்றைய தினம் ஸங்கிரமணமோ அன்றைய தினத்தில்தான் தோஷம். மறு

தினத்தில் தோஷமில்லை என்று பெரிய விசாரத்தின்பேரில் தீர்மானிக்கப்பட்டது. இப்படித்தான் திருச்சி அத்வைதசபையிலும் தீர்மானிக்கப்பட்டது. அதன்பேரில் திருக்கணித பஞ்சாங்கப்படி ஆவணி ௴ 1௳ சிராவண பௌர்ணமியில் எல்லா யாஜுஷர்களுக்கும் உபாகர்மம் போட்டிருப்பது சரியே என்று நிர்ணயிக்கப்பட்டது. 2 அந்த பஞ்சாங்கப்படி ரிக்வேத உபாகர்மம் ஆவணி ௴ 28௳ குறிக்கப்பட்டதில் குருவுக்கு பால்யம் இருக்கிறதே என்று சங்கை. இதற்கு ஸமாதானம் "குரு சுக்கிரர்களுடைய பால்ய மௌட்டிய வார்த்தகங்களில் முன்பின் தள்ளவேண்டிய நாட்கள் முகூர்த்தக்ரந்தங்களில் பலவிதமாகக் குறிக்கப்பட்டிருப்பது தேசபேதத்திற்கு தக்கபடி செய்து கொள்ளவேண்டுமென்று வியவஸ்தை முகூர்த்தசிந்தாமணியில் கூறப்பட்டிருப்பதில் நம்முடைய சோளதேசத்திற்கு மூன்று நாள் தான் பார்க்கவேண்டுமென்று நச்சி ஸபையில் தீர்மானித்து எழுதியனுப்பின பிரகாரமே பிரு ஸ்ரீ டி. எஸ். விசுவநாத ச்ரௌதிகள் அவர்களால் பஞ்சாங்கத் போடப்பட்டது என்று வி. எஸ். வெங்கட்டராமசாஸ்திரிகள் ன்னுர்கள். அந்த புஸ்தகத்தைப் பார்த்துத்தான் தீர்மானிக்க ண்டுமென்று மறுவேளைக்கு இந்த விசாரம் மாற்றப்பட்டது. க்யபஞ்சாங்கங்கள் பலவாயிருப்பினும் அவைகளில் உபாகர்ம லங்கள் பலவிதமாகப் போடப்பட்டிருப்பினும் அவைகளில்போ ருக்கும் ஸிம்மஸங்கிரமண நாழிகையில் சில விநாடிகைகளே த்யாஸப்படுவதைத் தவிர நாழிகையில் வித்யாஸமில்லை. ஆவணி மாதம் 1௳ யிலேயே ஸிம்மரவி பன்னிரண்டே சொச்சம் நாழிகைக்குப் போடப்பட்டிருக்கிறது. அதனால் எல்லா வாக்ய பஞ்சாங்களிலும் சிராவணபௌர்ணிமைக்கு ஸங்கிரமணம் தோஷமிருக்கிறது. அதனால் மற்ற கௌணகாலங்களைத் தான் ஆச்ரயிக்கவேண்டும். அதில் ஆபஸ்தம்ப ஸூத்ரிகளுக்கு சிராவணிக்குதோஷம் வந்தால் பிரௌஷ்டபதியில் செய்ய வேண்டுமென்று,

**प्रौष्ठपद्यामुपाकुर्या च्छ्रावणेदूषिते यदि ।**

என்ற வசனப்படி ஏற்படுவதால் சில வாக்யபஞ்சாங்கங்களில் எல்லாயாஜுஷர்களுக்கும் உபாகர்மம்போட்டிருப்பது அந்த பஞ்சாங்கப்படி ஸரியாகாது. ஆனால் பிரௌஷ்டபதிக்கும கிரஹணதோஷமிருப்பதாக சில பஞ்சாங்கத்தில் போடப்பட்டிருக்கிறது. அது ஸரியல்ல



**अर्धरात्रादधस्ताच्चेत् संक्रान्त्यां ग्रहणेऽपि वा ।**
**उपाकर्म नकर्तव्यं परतश्चेन्न दोषभाक् ॥**

அர்த்த ராத்ரிக்கு முன் ஸங்கிரமணமோ கிரஹணமோ வந்தால் அன்று உபகர்மம் செய்யக்கூடாது. அர்த்தராத்ரிக்குப் பின் வந்தால் தோஷமில்லை என்ற வசனப்படி ஆவணி ௴ 30௳ யாகிய பிரௌஷ்டபதியன்று கிரஹணஸ்பர்சகாலம் உதயாதி 47-நாழிகைக்கு மேல் வருகிறபடியாலும் அது அர்த்த ராத்திரிக்குப்பின் வருவதாலும் தோஷமாகாதாகையால் பிரௌஷ்டபதிக்கு தோஷமில்லை. ஆகையால் வாக்யபஞ்சாங்கானுஷ்டாயிகளான ஆபஸ்தம்ப ஸூத்ரிகள் ஆவணி ௴ 30௳ பிரௌஷ்டபதியில் உபாகர்மம் செய்ய வேண்டும், போதாயன ஸூத்ரிகள் ஆடி ௴ 2௳யாகிய ஆஷாடியிலே செய்யவேண்டும். ஏனெனில்— "श्रावण्यां पौर्णमास्यामाषाढ्यां वोपाकृत्य" என்று போதாயன க்ருஹ்யஸூத்ரத்திலும்,

**श्रावण्यामथवाषाढ्यां प्रौष्ठपद्यामथापिवा ।**
**दुष्टायां पूर्वपूर्वस्यामुत्तरस्यां विधीयते ॥**

என்கிற வியாஸவசனத்திலும் போதாயனஸூத்ரிகளுக்கு சிராவணிக்கு அடுத்த காலமாக ஆஷாடியை எடுத்திருப்பதாலமென்க. இதே கருத்தை நிர்ணயஸிந்துவில்

**यत्तुबोधायनः—श्रावण्यामाषाढ्यां वेत्यूचे। तत् तच्छाखीयपरं॥**

என்ற வாக்யத்தால் விவரித்திருக்கிறர்கள். ஆகையால் வாக்ய பஞ்சாங்கப்படி போதாயன ஸூத்ரிகளான யாஜுஷர்கள் ஆடி மாதம் 2௳ ஆஷாடியில் உபாகர்மத்தைச் செய்யவேண்டும். வேறொரு பஞ்சாங்கத்தில் ஆவணி ௴ த்தில் இரண்டு பௌர்ணிமை வருவதால் அது மலமாசமாகிறதென்றும் அதனால் ஆஷாடியில் போடப்பட்டதென்றும் போடப்பட்டிருக்கிறது. அதுவும் ஸரி ஆகாது. ஏனெனில் — வைத்திநாததீக்ஷிதீயம் மலமாஸப்ரகரணத்தில் தர்சாந்தமாஸமென்றும் பூர்ணிமாந்தமாஸமென்றும் மலமாஸத்தை இரண்டுவிதமாகப்பிரித்து பூர்ணிமாந்தமாஸம் உத்திரதேசத்திற்கென்றும் தர்சாந்த மாஸம் தக்ஷிணதேசத்திற்கென்றும் கூறியிருப்பதாலமென்க. ஸ்ரீரங்கம் பஞ்சாங்கத்தில் ஆவணி ௴ 1௳ ஸங்கிரமணத்தையும் போட்டு அதிலேயே உபாகர்மத்தைப்போட்

டிருப்பது வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தை ஒட்டி வந்ததாம். ஸ்மா ர்த்தர்களுக்கு அது க்ராஹ்யமன்று. இவ்விதமாக அந்த பஞ்சா ங்கப்படி இவ்வருஷத்தில் உபாகர்ம காலம் அந்த ஏழுபேர் அடங் கிய சங்கத்தால் நிர்ணயிக்கப்பட்டு ஸபையில் மகா ஜனங்களின் முன்பாக பிரும்மஸ்ரீ வி. எஸ். வெங்கட்டராமசாஸ்திரிகளால் படி க்கப்பட்டது. அத்வைத ஸபாபண்டிதர்களால் அங்கீகரிக்கப்பட் டது. ரிக்வேதிகளின் உபாகர்ம காலத்திய சங்கை புஸ்தகம் அகப்படாமையால் நிர்ணயிக்கப்பட்டதாகச் சொல்லப்படவில்லை. பிறகு முகூர்த்த சிந்தாமணியைப் பார்த்ததில் திருச்சிஸபையில் கூறப்பட்டபடியே இருக்கிறது. அதாவது— முகூர்த்த சிந்தாம ணியில் 5-வது ஸம்ஸ்கார ப்ரகாணத்தில் 27-28-வது சுலோகங்க ளில் குரு சுக்கிரர்களின் பால்ய வார்த்தகங்களில் முன் பின் நாட் களின் சங்கியை—

पुरः पश्चाद्भृगोर्बाल्यं त्रिदशाहं च वार्थकम् ।
पक्षं पञ्चदिनं, ते द्वे गुरोः पक्षमुदाहृते ॥२७॥
ते दशाहं द्वयोः प्रोक्ते कैश्चित् सप्तदिनं परैः ।
त्र्यहंत्वात्ययिकेऽप्यन्यै रर्धाहं च त्र्यहं विधोः ॥२८॥

சுக்கிரனுக்கு பால்யம் கீழ்திசையில் 3-நாளும் மேற்றிசையில் 10 நாளும் வார்த்தக்யம் கீழ்திசையில் பதினைந்துநாளும் மேற்றிசை யில் ஐந்து நாளுமாம், குருவின் பால்ய வார்த்தகங்கள் 18-நாள்க ளாம். (27) குரு சுக்கிரர்களுக்கு பால்ய வார்த்தங்கள் 10-நாள் என்பர் சிலர். வேறு சிலர் 7-நாள் என்பர் சிலர் பின்னும் சிலர்3-நாள் என்பர். சந்திரனுக்கு பால்ய வார்த்தகங்கள்முறையே அரை நாள் 3-நாள் எனக்கொள்ள வேண்டும். (28) என்று கூறப்பட் டது. அதில் பால்ய வார்த்தகதின ஸங்கியையில் மதபேதமிருப் பதால் எப்படி வியவஸ்தை வைத்துக்கொள்ள வேண்டியது? என்று விசாரிக்கத் தொடங்கி பியூஷதாரை என்ற வியாக்யானத் தில்

"वयन्तु देशभेदेनैषां वाक्यानां व्यवस्थां ब्रूमः। तदाहगर्गः
"शुक्रो गुरुः प्राक्परतश्च बालो विन्ध्ये दशावन्तिषु सप्तरात्रम् ।
वङ्गेषु हूणेषु च सप्तपञ्च शेषे तु देशे त्रिदिनं वदन्ति ॥



நாம் இந்த வாக்யங்களுக்குதேசபேதத்தால்வியவஸ்தை கூறுகின் றோம். அங்ஙனமே கர்க்காசாரியாரும் — சுக்கிரனும் குருவும் கிழக்கிலும் மேற்கிலும் பாலனாயிருக்கும் காலம் விந்தியத்தில் 10. நாளும் அவந்தி தேசத்தில் 7-நாளும் வங்கதேசம் ஹூணதேசம் இவைகளில் முறையே 7-நாளும் 5-நாளும் இந்த தேசங்களைத் தவிர மற்ற தேசங்களில் 3 நாளுமாம்என்பார் என்றுகூறியுள்ளார் என்று சொல்லப்பட்டது. அதனால் சோளதேசத்திற்கு குருசுக் கிரர்களின் பால்யம் 3. நாளென்றிருப்பதால் திருக்கணித பஞ்சா ங்கத்தில் ரிக்வேதிகளின் உபாகர்மம் போட்டிருப்பது சரியே. இவ்விதமாக அத்வைத ஸபையில் உபாகர்ம நிர்ணயம் செய்யப் பட்டது. சுபம்! பத்திராதிபர்.

---

## இந்த வருஷத்தில் சுக்ல யஜுர்வேதிகளின் சிராவண நிர்ணயம்,

ஸ்ரீ காத்யாயன முனிவர் சுக்ல யஜுர்வேதிகளுக்கு, சிரௌ தம் ஸ்மார்த்தம் என்ற இரண்டுவிதமான கர்மங்களின் ஸ்வரூபத் தைதனது "காத்யாயனசிரௌத ஸூத்திரம், காத்யாயனகிருஹ்ய ஸூத்ரம் (அல்லது) பாரஸ்கரி கிருஹ்யஸூத்ரம் என்று இரு வகை ஸூத்திரத்தினால் நன்கு விளக்கிக் காட்டியும், போராமல் சிலர்கள் ஸந்தேகிக்க ஷெ ஸூத்ரங்களுக்கு பாஷ்யமியற்றினவர் கள் ஸ்ரீ கதாதார் ஸ்ரீஹரிதார் முதலிய ஐந்து மகரிஷிகள். காத் யாயன கிருஹ்யஸூத்ரத்தில் (சிராவண ஸூத்ரம்)

अथातोऽध्यायोपाकर्म ओषधीनां प्रादुर्भावे श्रवणेन श्राव ण्यां पौर्णमास्यां श्रावणस्य पञ्चमीं हस्तेनवा ॥

இந்த ஸூத்ரங்களினால் விளங்குகிறது, நாபுருஷி முதலியஔஷதிகள் உண்டாகிற காலமான சிராவணமாஸம் திருவோண நக்ஷத்திரம் கூடிய பௌர்ணமியிலோ அது சேராமல் கேவல பௌர்ணமியி லோ (அல்லது) ஹஸ்த நக்ஷத்திரம் கூடிய சிராவண சுக்லபஞ்சமி யிலோ அது கூடாத கேவல பஞ்சமியிலோ சுக்ல யஜுர்வேதி கள் சிராவணம் செய்ய வேண்டும் என்று.

இந்த வருஷம் சிராவண பௌர்ணமியில் ஸங்கிரமணதோஷ மிருக்கிறபடியால் ஆடி ௴ 22௳ பஞ்சமி சனிக்கிழமை 6-8-32

ஷ்டி தேதிகளில் உபாகர்ம செய்ய வேண்டும். ஆனல் மறுநாள் ஞாயிற்றுக்கிழமை பஞ்சமியிருக்கிறதே அப்படியிருக்க அந்த தினத்தை விட்டு பூர்வதினத்தில் செய்ப என்ன காரணமென்று கேட்கலாம். அதற்கு ஸமாதானம் ஸாமகர்களைத் தவிர மற்ற வேதிகளுக்கு உபாகர்ம பூர்வான்னமென்ற காலத்தில் (அதாவது) 15-நாழிகைக்குள்ளாகசெய்யவேண்டும். அதினுல்பூர்வாங்க வியாபியான திதியை கிரஹிக்குப்படி நோ மறுதினம் ஞாயிற்றுக்கிழமையில் 5½ நாழிகை பஞ்சமிதிதி இருக்கின்றதென்று நினைக்கலாம். அது ஸரியில்லை, இரண்டு தினங்களில் திதி ஸம்பந்தம் இருக்குமேயானல் பூர்வதின திதியில் சிராவணம் செய்ய வேண்டுமென்று அடியிற காட்டப்படும் பிரமாண வாக்யங்களில் நன்ருய் விளக்கும். ஆகையால் இந்த ஆங்கிரோஸ சிராவணம் ஆடி ௴ 22உ. சனிக்கிழமை பஞ்சமியில் சுக்லயஜுர்வேதிகள் செய்ய வேண்டியது என்று தோன்றுகிறது. மற்ற வேதிகளின் விஷயத்தை அவரவர்கள் ஸூத்ர மூலமாமாய் தெரிந்து கொள்ள வேண்டும்.

பிரமாணவாக்யங்கள்.

(स्मृतिमहार्णवे) संक्रान्तिर्ग्रहणं वाऽपि यदि पर्वणि जायते ।
तन्मासे हस्तयुक्तायां पञ्चम्यां वा तदिष्यते ।
संक्रान्तिर्ग्रहणं वाऽपि पौर्णमास्यां यदा भवेत् ।
उपाकृतिस्तु पञ्चम्यां कार्या वाजसनेयिभिः ॥
(मदनरत्नेऽपि) यदि स्याच्छ्रावणं पर्व ग्रहसंक्रान्तिदूषितम् ।
स्यादुपाकरणं शुक्लपञ्चम्यां श्रावणस्य तु ॥

एतच पूर्वाह्णकालएव कर्तव्यम् । (तथाचप्रचेताः) भवेदुपाकृतिः पौर्णमास्यां पूर्वाह्ण एवचेति (दीपिकाऽपि) अस्यतुविधेः पूर्वाह्णकालस्मृतः इति गोभिलस्त्वाह सामगानधिकृत्य ।

अध्यायानामुपाकर्म कुर्यात्कालेऽपराह्णके ।
पूर्वाह्णेतु विसर्गस्स्यादिति वेदविदो विदुः ॥ इति ॥

मदनपारिजातेऽपि पूर्वविद्धायां श्रावण्यां वाजसनेधिनामुपाकर्म इति स्पष्टं वर्तते ॥

அம்மனூர், A. R. வேங்கட்ராமசாஸ்திரி.



# பிராம்மண மஹிமை.

கும்பகோணம் அத்வைதஸபையில் நியாய சிரோமணியும் சிதம்பரம் அண்ணாமலை ஸர்வகலாசாலை நியாயோபாத்யாயருமாகிய வேப்பத்தூர் பிரும்மஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்கள் செய்த உபன்யாஸ ஸாராம்சம்.

உலகத்தில் ஒருவன் பிரபுவாயும் மற்றொருவன் தரித்ரனாயும் காணப்படுகிறன். அதற்கு காரணம் த்ருஷ்டமாக ஒன்றும் தெரியவில்லை. ஆகையால் அத்ருஷ்டந்தான் அதற்குக்காரணம் ஒன்று ஒப்புக்கொள்ளவேண்டும். புண்யம் பாபம் இவ்விரண்டிற்கும் அத்ருஷ்டமென்று பெயர். மேலும் ஒருவிதமான ப்ரயோஜனமும் இல்லாத காரியத்தில்விவேகமுள்ள புருஷர்கள் ப்ரவர்த்திமாட்டார்கள். அநேக வைதிகர்கள் த்ருஷ்டமான பிரயோஜனமில்லாத யாகம் தானம் முதலான காரியங்களில் பிரவர்த்திக்கிறர்கள். அவைகளுக்கோ த்ருஷ்டமான பலன் ஒன்றுமில்லை. ஆகையால் அவைகளிலிருந்துபுண்யமுண்டாகிறதென்று ஒப்புக்கொள்ள வேண்டும். யாகம் செய்வோர்கள் யாசகம் செய்து அதிலிருந்து பணம் கிடைப்பதால் அதையுத்தேசித்தே யாகாதிகளைச் செய்கிறர்களென்று ஒரு ஆக்ஷேபம் வரலாம். அப்படியிருந்தாலும் யாகம் செய்வதற்காக யாசகம்செய்பவர்களுக்கு தனிகர்கள் புண்ணியத்தை யுத்தேசித்தே கொடுக்கிறர்கள். ஆகையால் புண்யமென்பதை அவசியம் அங்கீகரிக்க வேண்டும். தனிகர்கள் கீர்த்திக்காகவும் ஜனங்களின் ப்ரீதிக்காகவும் வைதிகர்களிடம் பணம் கொடுப்பது வழக்கமில்லை.

வைதிகர்கள் செய்யும் கர்மாக்களுக்குபலமேகிடையாது. அத்ருஷ்டமான பலமிருப்பதாய் பெரியோர்களால் ஏமாற்றப்பட்டு அந்தகர்மாக்களை செய்கிறர்களென்றும் சொல்லக்கூடாது. ஏனென்றல் ஏமாற்றுகிறவர்கள் தன்னையே ஏமாற்றிக்கொள்வதில்லை. பெரியோர்களும் அதிர்ஷ்டார்த்தமானகாரியங்களை செய்கிறர்கள். ஆகையால் ஏமாற்றமடைந்து வைதிக கர்மாக்களை செய்கிறர்களென்று சொல்வது சரியல்ல.

661

ஆதிகாலத்தில் ஒருவர் உலகத்தை முழுமையும் ஏமாற்றுவத ற்காகதான் ஆயுள்காலம் முழுவதும் பருமசர்யத்தோடும் தபஸ் ஸோடும் கூடியிருந்து பிறரைசம்பும்படி செய்து ஏமாற்றிவிட்டார். ஆகையால் பெரியோர்களே ஏமாந்தவர்கள். அவர்களால் சிறுவர் கள் ஏமாற்றப்பட்டவர்களென்று ஏன் சொல்லக்கூடாதென்று ஒரு ஆக்ஷேபம் உண்டாகும். அது யுக்திக்குப் பொருத்தமா யில்லை. ஆயுள் முழுவதும் தான் துக்கத்தை யனுபவிப்பதை விட ஏமாற்றுகிறதினுல் உண்டாகிற சுகம் அதிகமில்லை ஆகையால் ஒரு மனிதன் அந்த எண்ணத்துடன் ஏமாற்றலாமென்று சொல்லு வதற்கில்லை. இதே விஷயத்தை உதயனாசாரியர் ந்யாயகுஸுமாஞ் சலியில் சொல்லுகிறார்.

किमसौ सर्वलोकोत्तरएव यः सर्वस्वदक्षिणया सर्वबन्धपरि त्यागेन सर्वसुखविमुखः ब्रह्मचर्येण श्रद्धया तपसा केवलं परवञ्चन केलि यावज्जीवमात्मानमवसादयति। केन वाचिह्नेनायमीदृश वैदग्ध्यालोकोत्तरप्रज्ञेनत्वया प्रतारक इति निर्णीतः। नह्येतावतो दुःखराशेः प्रतारणसुखं गरीयः॥

ஆகையால் பிரபஞ்சத்திற்குக்காரணமாகபுண்ணியபாபங்களையங்கீ கரிக்கவேண்டும். அந்த தர்மத்தை ரக்ஷிப்பதற்காக ப்ராமணனை ஈச்வரன் உண்டுபண்ணுகிறான். லோகத்திற்கு கோசஸ்தானத்தி லிருக்கிற தர்மத்தை ரக்ஷிப்பதே ப்ராமணனின் மஹிமை இதே விஷயத்தை மனுஸ்ம்ருதியில் சொல்லுகிறார்.

उत्पत्तिरेव विप्रस्य मूर्तिर्धर्मस्य शाश्वती।
सहि धर्मार्थमुत्पन्नः ब्रह्मभूयाय कल्पते॥
ईश्वरः सर्वभूतानां धर्मकोशस्यगुप्तये।

தர்மத்தை ரக்ஷணம் செய்வதென்றால் அந்த தர்மத்தை தான் செய்தல் பிறரை யனுஷ்டிக்கும்படி செய்யல் அதற்காக வேண் டியஉபதேசங்களைசெய்தலும்தான். இப்படி தர்மரக்ஷணத்திற்காக வேண்டியயஜனம் யாஜனம் அத்யாபனம் இவைகளையே ப்ராமண தர்மமாக ஸ்மிருதிகளால்சொல்லப்பட்டிருக்கிறது. தர்மத்தின் தத் வங்கள், வேதத்தில் சொல்லப்பட்டிருக்கின்ற அவைகளினர்த்தத் தையுபதேசித்தல், முக்யமான தர்மத்தை ரக்ஷிப்பதற்கு மூலகார



ணம். அது ப்ராமணனுக்குத்தான் தர்மமாகச் சொல்லப்பட்டிருக் கிறது.

மேலும் ராஜ்யத்தின் யோக க்ஷேமங்கள் ராஜாவை ஆச்ரயித் திருக்கிறது. ராஜாவின் யோகக்ஷேமங்கள் ப்ராமணனை ஆச்ரயித் திருக்கிறது.

ஒரு ராஜ்யம் சுகமாயிருக்கவேண்டுமானால் அதற்கு ராஜா ப்ராமணன் இருவர்கள் காரணமென்று கௌதமர் சொல்லுகிறார்.

"द्वौलोकेधृतव्रतौ राजा ब्राह्मणश्चबहुश्रुतः" ॥

அதாவது ராஜ்யத்திற்கு தைவீகமானவர்கள் ஏற்படுமானால் அவ புரோஹிதன் (ப்ராமணன்) மந்த்ர சக்தியால் அவைகளை போ வேண்டும். த்ருஷ்டமான பயத்தை ராஜா தனது மெய்பா பலத்தால் போக்கவேண்டும். இப்படியிருக்கிற ராஜ்யம் சுக ருக்குமென்று பாரதத்தில் சொல்கிறார்

यत्रादृष्टंभयं ब्रह्मप्रजानां शमयत्युत। दृष्टाश्चराजाबाहु तद्राज्यंसुख मेधते॥ तपोमन्त्रबलं नित्यं ब्राह्मणेषु प्रतिष्ठतं। ३. बाहुबलंनित्यं क्षत्रियेषु प्रतिष्ठितम्॥

இதற்கொரு உபாக்யானம் பாரதத்தில் சொல்லியிருக்கிறார். குந்தன் என்ற சக்ரவர்த்தி குபேரனை ஜயிப்பதற்காக அவனி போய் யுத்தம் செய்யும்போது குபேரனால் ஏவப்பட்ட யக்ஷ ராக்ஷஸன் முதலானவர்களை ஜயிக்கமுடியவில்லை. அப்பொ புரோஹிதனை வஸிஷ்டர் தன்னுடைய மந்திரபலத்தால் அ களை நாசம் செய்தார் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இட் ஏராளமான பணமுள்ள மஹாராஜாவால் செய்யமுடியாத காரி களை ஒரு ப்ருமணன் செய்திருப்பதே ஒரு ப்ருமணமஹிமை.

மேலும் ப்ரஜைகளின் விருத்தி அன்னத்தால் ஏற்படுகிறது. அன்னம் மழையால் உண்டாகிறது. மழை சூரியன் அனுக்ரஹத் தால் உண்டாகவேண்டும் அந்த சூரியனை அக்னியால் ஹோமங் கள் செய்து, சூரியனை ஸ்வாதீனப்படுத்துகிறான் ப்ருமணன். ஆகையால் ப்ரஜாவ்ருத்திக்குக் காரணமாயிருப்பதும் ப்ருமண மஹிமை.

" अग्नौ प्रास्ताहुतिः सम्यगादित्यमुपतिष्ठते ।
आदित्याज्जायतेवृष्टिर्वृष्टेरन्नं ततः प्रजाः" ॥

மேலும், ராஜா மந்திரிகளிடம் தனித்தனியே ஆலோசித்து கடைசியாக ப்ரும்மணனுடைய ஆலோசனையை கேட்டுக்கொண்டு ராஜ்யபரிபாலனம் செய்யவேண்டுமென் றுயாக்ஞவல்க்யஸ்ம்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் லோகங்களுக்கு ஸங்கட நிலைமையில் ஆலோசனை சொல்லுவதும் ஒருமஹிமை.

மேலும் படித்தவர்களுக்கு கௌரவமுண்டு என்பதை நாம் காணுகிறோம். அதிலும் ஸமஸ்த தத்துவங்களடங்கிய வேதங்க ளுடைய அர்த்தத்தை யறிந்தவர்க்கு கௌரவமதிகமென்பது சொல்லவேண்டியதில்லை. ஞானத்தினால் சிறியவன் பெரியவனா ன். ஞானமில்லாமையால் பெரியவர்களும் சிறியவர்களாக றார்கள். முன்காலத்தில் அங்கிரஸ்ஸினுடைய புத்திரர் வேதங் களின் அர்த்தத்தை யறிந்தவர் தன்முன்னோரை ஹே பிள்ளைகளே என்று கூப்பிட்டு அவர்களுக்கு ஞானத்தையுபதேசம்செய்தான். அப்பொழுது முன்னோர்கள் தங்களை புத்திரர்களே யென்று கூப் பிட்டதில் கோபம்கொண்டு தேவர்களிடம் அந்த விஷயத்தை முறையிட்டார்கள். தேவர்கள் எல்லாரும் சேர்ந்தே அந்த சிறு வர் சொன்னது சரியே, வயதினால் பெரியவன் ஆகமாட்டான் யதார்த்தத்தையறிந்தவன் பிதா. அஞானி புத்திரன். ஆகையால் அவன் உங்களை யப்படி கூப்பிட்டது சரியென்றுசொல்லிவிட்டார் என்று மனுஸ்ம்ருதியில் சொல்லுகிறார்.

" अज्ञो भवति वैबालः पिता भवति मन्त्रदः। अज्ञं हि बाल-
त्याहुः पितेत्येव तु मन्त्रदम् । न हायनैर्न पलितैर्न वित्तेन न
बन्धुभिः । ऋषयश्चक्रिरे धर्मं योनूचानः सनो महान् " ॥

ஆபத்தில்தன்னைவிடகீசஜாதியாரிடத்திலிருந்தும்ஞானத்தைஅப்ய ஸிக்கவேண்டுமென் றுஸ்ம்ருதிசொல்லுகிறது உபநிஷத்திலும்கேக யன் அஜாதசத்ரு முதலான க்ஷத்ரியர்களிடமிருந்து ப்ராம்மணர் கள்பஞ்சாக்நிவித்யா முதலானவைகளைதெரிந்துகொண்டார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவைகளால் ஞானம் மிகவும் உயர்ந் தது என்று தெரியவருகிறது. चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागशः



என்று கீதையில் பகவான் சொல்லியபடி ஸத்வகுணத்தை ப்ரதா னமாக வைத்து பிராமணனை ஸ்ருஷ்டி செய்திருப்பதால்

तत्र सत्वं निर्मलत्वात्प्रकाशकमनामयं ।

என்று சொல்லியபடி அந்த குணத்திற்கு ஞானத்தை உண்டுபண் ணுகிற சக்தியிருக்கிறபடியால் பிராமணர்கள் விசேஷமாய் ஞான முள்ளவர்களாக காணப்படுகிறார்கள். विप्राणां ज्ञानतोज्यैष्ठ्यम्. என்று மஹாபாரதத்தில் சொல்லியபடி வேதார்த்தங்களுடைய ஞானமிருப்பதே பிராம்மணமஹிமை. மேலும் இந்த ஜகத்திற்கு மூலகாரணமெது என்று விசாரிப்பதே மிகவும் அரிது. இந்தபெரிய விஷயத்தை முதல் முதலில் பிராமணர்கள் ஹிமயமலையில் கூடி விசாரித்து பிரம்மந்தான் மூலகாரணம் என்றுகண்டுபிடித்தார்கள் என்று பாரதத்தில் சாந்திபர்வத்தில் சொல்லுகிறார். இன்னு வேதங்கள் கூட துருஹமான விஷயங்களை சொல்லுமிடத்தில் ட ங்கள் சொல்லுவதற்கு பிரமாணமாக பிராமணவாக்கியத்தை சொல்லுகின்றன. ब्राह्मणा वदन्ति अस्थूलमनणु अह्रस्वमदीर्घ என்று பிராமணர்கள் சொல்லுகிறார்கள் என்று வேதம் சொல்லுகிறது ஆகையால் ஸர்வப்ரமாணமூர்தன்யமான வேதங்களால் ப்ரமாண மாக பிராமணவாக்யத்தைச் சொல்லியிருப்பதே பிராமணமஹி மை. மேலும் பிராம்மணஜாதியின் உற்பத்தியை ஆலோசித்த லும் பிராமண மஹிமை வெளிப்படும். பிரம்மாவின் முகத்திலிரு ந்து பிராமணன் உண்டானான். கை கால்கள் முதலான அவய வங்களிடமிருந்து மற்ற ஜாதி உண்டாயினவென்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மனுஷ்ய சரீரத்தில் நாபிக்குமேல்ப கம் சுத்தமென்று வேதம் சொல்லுகிறது. ஆகையால் பிரும்மா வின் முகம் மிகவும் பரிசுத்தம். ஆகையால் மிகவும் சுத்தமாக ஸ்தானத்திலிருந்து உண்டானது ஓர் பிராமண மஹிமை. மேலும் எல்லா வர்ணத்தைக்காட்டிலும் முதலில் பிராமணன் உண்டா னான் ஆகையால் ஜ்யேஷ்டனாகையால் பெரியவன் என்பதான மஹிமையுண்டு.

மேலும் தேவர்கள் பித்ருக்கள் திருப்தி அடைந்தால் தான் பூலோகத்திலுள்ளவர்கள் சுகமாயிருக்கலாம். அவர்களை பிராமண முகமாகத் தான் திருப்தி பண்ணிவைக்கவேண்டும். ஸர்வதேவ ஸ்வரூபியான பிரும்மா தன்னுடைய முகஸ்வரூபமான பிராமண

ர்கள் திருப்தி அடைந்தால் அன்னத்தைச் சாப்பிட்டு திருப்தியடைந்தால் போல் திருப்தியடைகிறார். அவர் ஸர்வவேத ஸ்வரூபியானபடியால் அவர் திருப்தி அடைந்தால் ஸர்வதேவர்களும் திருப்தியடைகிறார்கள். ஆகையால் லோக க்ஷேமகார்களான தேவபித்ருக்களுடைய திருப்திக்குக் காரணமாயிருப்பதும் பிராமண மஹிமை. இதே விஷயத்தை மனு

यस्यान्नेन सदाश्नन्ति हव्यानि त्रिदिवौकसः ।
कव्यानिचैव पितरः किं भूतमधिकं ततः ॥

என்ற ச்லோகத்தால் சொல்லுகிறார். மேலும் பிராமணனுக்கு பிறவிக்கு முந்தியே வேதமந்திரங்களால் ஸம்ஸ்காரம் உண்டு. பிறந்த பின்னும் உண்டு. உபநயனத்திலும் க்ஷத்ரியர் முதலானவர்களை விட ஸம்ஸ்காரம் அதிகம். ஆகையால் வேதமந்திரங்களால் வைதிக ஸம்ஸ்காரம் இருப்பதாலும் பிராமணன் சிரேஷ்டன். இந்த விஷயங்களை மனுவும் யாக்ஞவல்க்யரும் சொல்லுகிறார்கள்.

(मनु) वैशेष्यात्प्रकृतिश्रैष्ट्यात् नियमस्यच धारणात् ।
संस्कारस्य विशेषाच्च वर्णानां ब्राह्मणः प्रभुः ॥

(याज्ञ) तपस्तप्त्वासृजद्ब्रह्मा ब्राह्मणान्वेदगुप्तये ।
तृप्त्यर्थं पितृदेवानां धर्मसंरक्षणायच ॥

மேலும் கிருஷ்ணபகவான் தர்மபுத்திரருக்கு பிராமண மஹிமையைச் சொல்லுகிறார் என்று ஒரு அத்யாயம் பாரதத்திலிருக்கிறது. கௌதமர் என்ற பிராமணரின் சாபத்தால் த்ரிலோகாதிபதியான தேவேந்திரன் ஆட்டுத்தன்மையை அடையவில்லையா. வ்ருத்ரன் என்ற பிராமணனைக் கொன்றுவிட்டபடியால் தேவேந்திரன் அநேககாலம் ராஜ்யத்தை இழக்கவில்லையா? சுக்ராசாரியர் (பிராமணன்) திரிபுர வதத்திற்காக தீக்ஷை பெற்ற பரமசிவனுக்கும் தன்னுடைய மந்த்ர சக்தியால் உண்டு பண்ணிய ஸர்பங்களால் கழுத்தை உபத்ரவப்படுத்தவில்லையா அது முதல்தான் ஈச்வரனுக்கு நீலகண்டனென்று பெயர். லோகரக்ஷகமான இந்திரன் வஜ்ராயுதம் ததீசி என்கிற பிராமணரின் முதுகு எலும்பால் செய்யப்பட்டது என்று அதில் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் 100-க்கு 4 பேர் கூடயில்லாமலிருக்கிற பிராமணர்களை இதரர்கள்



அஸூயையால் அதிகமாய் தூஷிப்பதே பிராமணமஹிமை காண்கிறது. (பௌத்தர்) சாந்தரக்ஷிதர் தத்வஸங்கிரஹம் என்னும் புத்தகத்தில் ஜாதியே கிடையாது என்று சொல்லிவிட்டு பிராமண ஜாதியை மிகவும் சுலபமாய் பதில் சொல்லக்கூடிய யுக்திகளால் தூஷிக்கிறார்.

ப்ரபாசந்திராசாரியார் ஜாதியை தூஷிக்கும்போது குறிப்பிட்டு த்வேஷத்தால் ப்ராமண்யம் என்ற ஜாதியை தூஷிக்கிறார். ஒரு ப்ரும்மாவின் சரீரத்திலிருந்து உண்டானவர்களுக்குள் உத்கர்ஷம் அபகர்ஷம் எப்படி சொல்ல முடியும். மேலும் ப்ராமண்யம் என்ற ஜாதியை அறிந்து கொள்ள சூத்ரர்களிடமில்லாத அவயவங்களின் அமைப்பு என்னயிருக்கிறது ஆகையால் அது ஜாதியாகாது என்று சொல்லுகிறார். வைத்ய சாஸ்திரங்களில் ஒரே ஓஷதிகளில் அடிபாகத்திலிருக்கிற இலைகளுக்கு சில வ்யாதியை நிவர்த்திசெய்யும்படியான சக்தியிருக்கிறது. மேல்பாகத்திலிருக்கிற இலைகளுக்கு வேறு சிலவியாதியை நிவர்த்திசெய்யும்படியான சக்தியிருக்கின்றதென்று சொல்லப்படுகிறது அதுபோல ப்ரும்மாவின் தேகத்திலிருந்து உண்டானவர்களுக்குள் தாரதம்யம் இருக்கலாம். ஸுவர்ணத்வம் என்ற ஜாதி தங்கத்தைப்பார்த்தவுடன் (மெருகு கொடுப்பதற்கு முன்) ஸ்வர்ணம் என்று தெரிகிறதில்லை. இது ஸுவர்ணம் என்று உபதேசித்தால் அதைப்பார்த்தால் ஸ்வர்ணத்வஜாதி தெரியப்படுகிறது. அது போல் இவர் ப்ராமணனின் புத்ரன் என்ற உபதேசத்தின்பின் அவனைப் பார்த்தால் ப்ராமண ஜாதி தெரியும்.

ப்ராமணனுடைய புத்திரனை ப்ராமணன் என்று சொல்லுகிறோம். ஸ்ருஷ்டியின் ஆதியில் முதல் ப்ராமணன் ப்ரும்மாவின் முகத்திலிருந்து உண்டானபடியால் எப்படி ப்ராமணனானான் என்று ஒரு கேள்விகேட்கிறார்கள். தேளிலிருந்து தேளுண்டானாலும் முதல் தேள் சாணியிலிருந்து உண்டாகிறது. அதுபோல முதல் பிராமணன் முகத்திலிருந்து உண்டானாலும் அவனிடமிருந்து உண்டானவர்கள் பிராமணர்களாகலாம். ஆகையால் அந்த கேள்வி சரியல்ல. மேலும் ஸந்யாஸியைத்தான் ப்ராமணன் என்று தேவர்கள் அறிகிறார்கள் பாரதத்தில் விசேஷமாக சொல்லப்பட்டிருக்கிறது. ஸந்யாஸாச்ரம் முக்தியைத் தரக்கூடிய ஆச்ரமமாகையால் ப்ரும்மாச்ரமம் என்று சொல்லப்படுகிறது. அந்த உத்க்ருஷ்ட

மான ஸ்யாஸாச்யமத்தை யடைவதற்கு ப்ராம்மணனுக்கே அதிகாரம். ஆகையால் ஸ்யாஸியாவதற்கு யோக்யதையிருப்பதே ப்ராம்மணமஹிமை. மேலும் ப்ருமணனுக்குத்தான் மோக்ஷம் என்று

**मौनं चामौनश्चाथब्राह्मणः ।**

என்று ப்ராமணனானபின் மோக்ஷமடைகிறுன் என்று சொல்லியிருக்கிறது. அங்கு ப்ராமணன் என்பதற்கு ப்ரும்மஞான முள்ளவன் என்று அர்த்தம். அந்த ப்ராமணன் முக்தியடைந்தவன். அவனுடைய மஹிமையைச் சொல்லவும் வேண்டுமோ? வேதம் அவனுடைய மஹிமையை

**एषनित्योमहिमाब्राह्मणस्य न कर्मणावर्धते नोकनीयान् ॥**

என்று சொல்லுகிறது. இவ்வளவு ப்ராமணவம்சத்தில் பிறந்திருப்பதே இப்போதிருக்கிற ப்ராமணரின் மஹிமை.

---

# தர்சமும் ஸங்கிரமணமும்

(முன்பக்கத் தொடர்ச்சி)

இதிலிருந்து தீக்ஷிதருடைய அபிப்ராயம், **द्वयोरन्यतरमनुष्ठेयम् ।** என்பதினுல் ஒன்றில் வகுபுத்தியில்லாததால், காலபேதமிருந்தால் இரண்டையும் அனுஷ்டிப்பதில் சம்மதமென்றும், ஒரே காலமானுல் ஒன்று செய்தால் போதுமென்றே அபிப்பிராயம் இருக்கிறதாகவும் தெரிகிறது.

அப்படி நமது ஆசாரத்தைக் காணுமேயென்றல் ஸங்கிரமண தர்ப்பணத்தை

**"अह्निसंक्रमणेपुण्यमहः कृत्स्नं प्रकीर्तितम्" ।**

என்ற வசனத்தால் மாத்யாஹ்நிக காலத்திலேயே செய்துவருவதால் தனியாக தர்சத்தை செய்கிறதில்லை

தீக்ஷிதீயத்தைப் பின்பற்றிய சில கண்டகிரந்தங்களில் (ஆசார நவநீதம், ஸத்கர்மசிந்தாமணி) வியக்தமாய் தர்சத்தையும் சங்கிரமணத்தையும், தர்சத்தையும் கிரஹணத்தையும் கால



பேதத்தால் செய்யச் சொல்லியிருக்கிறது. மாக, பால்குன மாசங்களில் யுகாதி, மன்வாதி வருகிறபடியால் அவைகளை விட்டு மற்ற தர்சங்களில் காலபேதத்தால் அனுஷ்டானம் கூறியிருக்கிறது.

ஸங்கிரமணத்தில்,

**यायाःसन्निहितानाड्यः तास्ताः पुण्यतमास्स्मृताः ।**

என்கிறபடி ஸங்கிரமணகாலத்தில் செய்தால் மற்ற நிமித்தங்களுக்கு காலபேதமேற்படுகிறது. விஷு: அயனங்களில் தர்சம் நேர்ந்தால் தர்சத்தை விடும்படிக்கும், விஷ்ணுபதி ஷடசீதிகளில் தர்சம் வந்தால் தர்சத்தை செய்யும்படிக்கும் உள்ள வசனமும் இருந்துவருகிறது. இதனுலும் தர்சம் நித்யமென்றே சொல்லி விடவும் போதுமானதில்லை. நிமித்தபேதத்தால் தனியே ஒவ்வொன்றும் செய்யவேண்டுமென்பதால், தாய் தகப்பன் சிராத்தம் ஒரே திதியாயிருந்து ஒரே பாகத்தால் நடந்தால் அர்கமாக தர்ப்பணமும், நிமித்தப்படி இரண்டு தான் செய்யநேரிடுகிறது. ஆனுல் இரண்டும் சிராத்தப் பிரதிநிதியில்லாமல் அங்ககர்மாவாயிருப்பதால் ஏககாலத்தில் செய்கிற பல கர்மாக்களுக்கு அங்கங்களை ஒன்ருக (அங்குரம், பிரதிஸரம்போல்)ச் செய்வதுபோக ஒன்ருகவே சிராத்தாங்க தர்ப்பணத்தைச் செய்கிறதும் நியாயமாகும். தர்ப்பண தர்ப்பணமென்கிற ஓர் கண்டகிரந்தத்திலும் சில அனுஷ்டானம், ஆசாரத்திலில்லாதவைகளான அனுமாஸிக தர்ப்பணமும், ஜீவபிதிருக்களுக்கு தர்ப்பணமும் ஆசௌச சம்பவத்திலும் சிராத்தாங்க தர்ப்பணமும் கூறியிருக்கிறது. ஷைகிரந்தம் அச்சிலில்லை. கர்த்தாவும் தெரியவில்லை. தர்மவிசாரத்தில் ஆஸ்தையுள்ள பெரியோர்கள் மேற்கண்டவைகளை (நிவேதனம்) தெரியப்படுத்துவதாக எண்ணி அவரவர் சம்மதத்தையும் தர்ம சாஸ்திரத்தையும் நியாயத்தையும்கவனித்து ஜிஜ்ஞாஸுவின்வேண்டுதலையைப் பூர்த்திசெய்யவேண்டுகிறேன். சுபம்.

உமாமகேச்வர சாஸ்திரிகள்.

---

# சிறுவருக்கான சிறுகதைக் கொத்து.

## சுந்தஉபசுந்தன்.

ஹிரண்யகசிபுவின் வம்சத்தில் நிகும்பன் என்று ஓர் அஸுரனிருந்தான். அவனுக்கு ஸுந்தன் உபஸுந்தன் என்று இரண்டுபிள்ளைகளிருந்தார்கள். இருவரும் பலசாலிகள் துஷ்டர்கள் ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாதவர். இருவரும் விந்தியமலைக்குச் சென்று தவம்செய்தனர். அன்ன ஆஹாரம் உண்பதில்லை. திறந்தகண்ணைக் கொட்டுவதில்லை.

ஒற்றைக்காலால் நின்றனர். காற்றுமழைக்கு அஞ்சவில்லை. இத்தவத்தைக் கெடுக்க இந்த்ரன் வேண்டிய முயற்சி செய்தான். அழகான அப்ஸரஸ்ஸுகளை அனுப்பினன், உயர்ந்தரத்நங்களை ்திரில் கொண்டுவைத்தான். எதற்கும் இவர்கள் சலிக்கவில்லை. ்த்தில் பயனில்லை. பயத்தினலாவது பார்ப்போம்.

என்று இந்த்ரன் முயற்சித்தான். ராக்ஷஸர் ஸிஹோதரிகளை அன்னையையும் மாயையால் படைத்தான். இவர்கள் எதிரில் ாண்டுவந்து வெட்டினன். அவர்கள் ஐயோ! ஐயோ!! என்னை ாப்பற்று என்று கதறினர்கள். அப்போதும் இவர்கள் சலிக்க ்லை. இவர்கள் உறுதியைக்கண்டு பிரும்மா ஸந்தோஷமடைந்தார்.

எதிரில் வந்தார். என்னவரம்வேண்டுமென்றார். அவர்கள் ்ன்று லோகத்தையும் ஆளவேண்டும், நாங்கள் சாகாமலிருக்க வேண்டுமென்றார்கள். முதல் வரத்தைக்கொடுத்தார், இரண்டா ்தைக் கொடுக்கவில்லை. எப்படியும் உங்களுக்கு மரணம் உண்டு ்ன்றார். ஆனல் நாங்கள் ஒருவரை ஒருவர் கொன்றால் தான் ்வுவரவேண்டும் என்றார்கள்.

இவர்கள் பரஸ்பரம் அன்யோன்யமாக இருப்பதால் அடித்துக்கொள்ள மாட்டோம் என்று எண்ணினர்கள். பிரும்மா அப்படியே ஆகட்டும் என்றார். உடனே இவர்கள் ராக்ஷஸத் தொழிலுக்கு ஆரம்பித்தனர். ஊர் ஊராகச் சென்றனர். எல்லோரையும் ஹிம்ஸித்தனர். ரிஷிகளைக் கொன்றனர் ஸ்திரீகளைக் கெடுத்தனர்.

குருக்ஷேத்ரத்தில் வஸித்தனர். யானை காடி புலி முதலிய ரூபங் கொண்டனர். எல்லோரையும் அடித்துக் கொன்றனர்.



மிகுதி உள்ளோர் பயந்து ஓடினர். மலைகுஹைகளில் பதுங்கினர். அங்கும் இவர்கள் வந்து கொன்றனர். இதைக்கண்டு தேவர்கள் கஷ்டமடைந்தனர். பிரும்மலோகஞ்சென்றனர்.

பிரும்மாவைச் சரணமடைந்தார்கள். அவர் சற்று யோசனை செய்தார். காமம் ஒன்றே இவர்களைக் கொல்ல வழி என்று நிச்சயித்தார். அப்போதுள்ள அப்ஸரஸுகளை விட அழகாக ஓர் பெண்ணைப் படைத்தார். ஒவ்வோர் ரத்நத்திலிருந்தும் எள்ளளவு அழகை எடுத்தார். நிறைந்த அழகோடு இவளைப் படைத்தார்.

ஆதலால் இவளுக்கு திலோத்தமை என்று பெயர். இவள் கைகூப்பி ஸ்வாமி அடியாளுக்கு என்ன வேலை? என்றாள். ஸுந்தோபஸுந்தரிடம்போ! அவர்களை மயக்கு! அவர்ஒருவருக்கொருவர் அடித்துக்கொண்டு இறப்பர் என்றார். அப்படியே என்ற புறப்பட்டாள் இவள் அழகைப்பார்த்துபிரும்மா வேமோஹித்தா

ஒருஸமயம் இவ்விரு அஸுரரும் விந்த்யமலைக்குச் செனர். நன்றாக மதுபாநம்செய்தனர். அழகானபெண்கள்இவர்களுக்குப்பணிவிடைசெய்தார்கள். அச்சமயம்திலோத்தமைஅங்குசென்றாள். இவளைக்கண்டு இருவரும்மோஹித்தனர். இவள்என்மனைவி நீ தொடாதே! இவள் என்மனைவிதான்! நீதொடாதேஎன்றனர்

காமத்தாலும் குடி மயக்கத்தாலும் ஸ்நேஹத்தை மறந்தனர். கையால் ஆயுதமெடுத்துக்கொண்டார். ஒருவரை ஒருவர் அடித்தனர். முடிவில் இருவரும் இறந்தனர். திலோத்தமை தேவலோகம் சென்றாள். தேவர் மகிழ்ந்தனர். முனிவர் ஸந்தோஷித்தனர். காமமும் குடியும் மனிதனைக்கொல்லும் அதற்கு இடமளிக்காதே!

வெ ஸோமதேவசர்மா.

# வாரவிருத்தாந்தம்.

ஸ்ரீவிஜயீந்த்ரதீர்த்தாள் 1௨ கும்பகோணத்தில் ஸ்ரீமத்மத ஆசார்யாளான ஷை ஸ்வாமிகளது தினம் அபிஷேகாலங்காராதிகளுடன் சிறப்பாக அவாள் மடத்தில் நடந்தது. எண்ணூறு பிராமணர்களுக்கு அன்னதானமளிக்கப்பட்டது. இங்ஙனம் ஆசார்யதினத்தைக்கொண்டாடுவதோடு இதர மததூஷணையில்லாமல் தம்மதத்தையும் பொது தர்மத்தையும் பிரசாரம் செய்வது சிலாக்யம்.

38-வது அப்தபூர்த்தி 2உ கும்பகோணம் ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் மடத்தில் அத்வைத ஸபையின் ஆண்டுவிழா துவக்கப் பட்டது. வழக்கம் போல் பரீக்ஷை உபன்யாஸம் ஸம்பாவனை ஸமாராதனை அனைத்தும் நடக்கும். குறைந்த பக்ஷம் ஜில்லாவிற்கு ஓர் சாகாஸபையாவது தோன்றி பிரசாரம் செய்யும்படிக்கும் மூலஸபை பிரயத்நப்படல் அவசியம்.

குணமுள்ள ராஜா 4உ காஷ்மீர மகாராஜா ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார். மதமென்ற வியாஜத்தால் பரஸ்பரம் கலஹம் செய்து வீடுகளை இழந்த தனது ப்ரஜைகளுக்கு ஓர்லக்ஷத்து ஐம்பத்தேழாயிரம் ரூபாய் செலவு செய்து வீடுகட்டிக்கொடுக்க வுவர் முன்வந்தார். இஃதன்றோ உண்மையான அரசனது கட 'ம. இவரது இராஜ்யத்திலும் கலகமென்றால் அது கலியின் 'க்ஷமே ஆகும்.

ஸத்விஷயம் 5உ சென்னை ஸ்ரீமடத்தில் ஸ்ரீஜகத்குரு சங் சாரியஸ்வாமிகள் ஸ்ரீமடம் ஆஸ்தான வித்வான் ஸ்ரீமான் ஷ்மீநாராயண சாஸ்திரிகள் சரீரரக்ஷணமென்பதுபற்றி ஓர் ழகான உபன்யாஸம் செய்தார்.

ஸப்தாஹம் 11உ முதல் சென்னை திருவல்லிக்கேணி பா ரடு ரங்கபஜனை மந்திரத்தில் பிரும்மஸ்ரீ லக்ஷ்மீநாராயணசாஸ் ிகள் மற்றோர் ஸப்தாகத்தை துவக்கி நடத்துகிறார். அபர தில் மிக ஆஸ்திகதையுடன் சோம்பலின்றி சரீரச்ரமத்தைப் ராமல் லௌகிகபலத்தை எதிர்பாராமல் இவாள் அழகாக உப ாஸம் செய்வது எல்லோருள்ளத்தையும் கொள்ளைகொள்கிறது. ன்ட ஆயுளைப் பெற்று எண்ணிறந்த ஸப்தாகம் செய்வாராக.

மந்த்ரமஹிமை 9உ சின்ஷா என்றவிடத்தில் ஓர் மகம்மதி ர் மிக பயங்கரமான புலியைத் தன் பின்னர் யாதொரு கட்டு மின்றி நாயைப் போல் அழைத்துச் சென்றார். இங்ஙனம் புலி தனக்கு அடங்கிக்கிடக்க மந்த்ரமே காரணமென்றார். மந்த்ரசக்தி அளவிலடங்காதது. கடும்புலி ஸிம்மம் ஸஞ்சரிக்கும்மஹாரண்யத்தில் மஹரிஷிகள் எப்படிவசித்தனர். மந்த்ரசக்தியன்றோகாரணம்.

வெ. ஸோமதேவ சர்மா.

